உ
சிவமயம்

எண் 2

# சிவஞானக் களஞ்சியம்

*





*


ஆசிரியர்
திருவாவடுதுறை யாதீன வித்துவான்
த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை


விலை அணா 4

# குறிப்பு.

திருவாவடுதுறை ஆதீன வெளியீடுகள் வேண்டுவோர் ஆதீன வித்துவானுக்கே எழுதுதல் வேண்டும். மானேஜ்மெண்டு ஆபீசுக்கு எழுதினால் கடிதம் கவனிக்கப்படமாட்டாது. வெளியீடுகளைப்பற்றி ஏதேனும் தெரிந்துகொள்ள விரும்புவோர் ரிப்ளை கார்டு எழுதுமாறு கோரப்படுகிறது. தபாற்செலவு அனுப்பினால் வெளியீடுகள் அனுப்பப்பெறும்.

தங்கட்குக் கிடைக்கும் ஆதீன வெளியீடுகளைப் பற்றிய உயர்ந்த கருத்துக்களை ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கட்கு அன்பர்கள் தெரிவித்தல் கடப்பாடாகக் கொள்ளவேண்டும் என வேண்டுகிறேன்.

X X X X X

# மதிப்புரை.

## சுயமரியாதையியக்கச் சூறுவளி.

இதனை இயற்றியவர் '**சிவசேவகன்**' என்னும் ஒரு சைவ அன்பர். அவர்களுக்கு இப்பெயர் புனைபெயர். இந்நூலின்கண் நாத்திகம் முதலாக போக்கியம் ஈறாக 24 தலைப்புகளில் செய்திகள் வெளியிடப்பட்டுள்ளன.

இதன்கண் உள்ள ஒவ்வொரு தலைப்பகத்திலும் அனுவாதம் செய்துகொண்டு அதற்கு ஆசங்கை நிகழ்த்துகிறார்கள். இருபத்து நான்கு அனுவாதங்களும் 1603 ஆசங்கைகளும் உள. இவ் வாசங்கைகளுக்கு விடைதருமுகத்தால் மிக நுண்ணறிவு தோன்றும். தோன்றவே: மக்கள் மக்கட்டன்மையெய்தித் தமக்கும் பிறருக்கும் நன்கு பயன்படுவர். நல்ல கூரிய புத்தியுடன்தான் ஆசங்கைகளுக்கு விடை கூற அமையும்

# சிவஞானக் களஞ்சியம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.



## ஞானாமிர்தம்.



வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

### சமயம்.

சமயமாவது மனிதர்கள் அறிவுவிளக்கம் பெற்று உறுதி யெய்தி இன்பவாழ்வு அடைதற்குச் சாதகமாயுள்ள ஞானாலயமாம.

சமயம் காணப்படும் அசேதனப் பிரபஞ்சமாகிய உலகத்தின் சொரூபத்தினையும, அதுபோலக் காட்சியினால் எளிதில் அறியவாராது அநுமானப் பிரமாணத்தினால ஊகித்து இனிது அறிய நிற்கும சேதனப் பிரபஞ்சமாகிய ஆன்மாக்களின் சொரூபத்தினையும், முழுமுதற் கடவுளாகிய பரமான்மாவினை

சொரூபத்தினையும், ஐய விபரீத மில்லாமல் தெளிவாகக் காட்டும் ஞான தீபமாம். சமயம் மனிதர் சரீர சுகத்திற்கும் ஆன்ம சுகத்திற்கும் அநுகூலமாகும் நன்மைகளை விதித்து அவ்விரண்டு சுகத்திற்கும் பிரதிகூலமாகும் தீமைகளை விலக்கி அவரைக்காக்கும் ஞான அரணமாம். சமயம் மனிதர் தாம் பெறுங்கல்வி, செல்வம், அதிகாரம் முதலிய பேறுகளுக்கு ஏற்கும்படி [illegible] அன்புசெய்து அளவளாவி வாழுவதற்குரிய லௌகிக வைதிக ஒழுக்கங்களைப் போதிக்கும் நீதி நிலயமாம். சமயம் மனிதர்களுக்குக் கரும சாதனங்களை அறிவிக்கும் தந்திர கலாரூபமாம். சமயம் மனிதர்க்கு நித்தியா நித்திய வஸ்து விவேகத்தினை உணர்த்தும் உபதேச கலாரூபமாம். சுருங்கச் சொல்லின், சமயம் மனிதர்களுடைய இகபர சுகங்களுக்கு, இன்றியமையாத சாதனங்களெல்லாவற்றினையும் அவர்களுக்குக் குறைவறக் கொடுக்குஞ் சர்வசித்திப் பிரத ரூபமான ஒரு கற்பகதரு வெனப்படும்.

சமயம் முதற்கடவுள் நிறுத்தியதும், முதற்கடவுள் ஆணையினால் தத்துவஞான சித்தியுடையோர் நிறுத்தியனவும், கலைஞான சித்தியுடையோர் நிறுத்தியனவும், பிராகிருத விசேட புத்திமான்கள் நிறுத்தியனவும், பிராகிருத சாமானிய புத்திமான்கள் நிறுத்தியனவு மெனப் பலவகைப்படும். முதற்கடவுள் நிறுத்திய சமயம் மேற் சொல்லிய இலக்கணங்களும் அவை போல்வனவுமாகும் நலங்கள் பிறவும் ஒருங்குடையதாய்த் திரிபின்றி மற்றைச் சமயங்கள் சொல்லும் பொருள்களெல்லாம் தனனிடத் தடங்கக் கொண்டு விளங்கும் பூரண மார்க்கமாம். மற்றைத் தத்துவஞான சித்தியுடையார் முதலியோர் நிறுத்திய சமயங்களெல்லாம் ஒவ்வோர் வகுப்பினராயுள்ள அதிகாரிகளுக்கே உரியனவாய்க் காலந்தோறும் தன்மை வேறுபட்டுவரும் ஏகதேச மார்க்கங்களாம்.

இனிப் பிராகிருத சாமானிய புத்திமான்கள் நிறுத்திய சமயங்களை நோக்கப் பிராகிருத விசேட புத்திமான்கள் நிறுத்திய சமயங்கள் வியாபகமாம். பிராகிருத விசேட புத்திமான்கள் நிறுத்திய சமயங்களை நோக்கக் கலைஞான சித்தியுடையார் நிறுத்திய சமயங்கள் வியாபகமாம். கலைஞான சித்தியுடையார் நிறுத்திய சமயங்களை நோக்கத் தத்துவஞான சித்தியுடையோர் நிறுத்திய சமயங்கள் வியாபகமாம். தத்துவஞான சித்தியுடையோர் நிறுத்திய சமயங்களை நோக்க முதற் கடவுள் நிறுத்திய சமயம் வியாபகமாம்.

இனி, முதற் கடவுள் நிறுத்திய சமயம் சமய அாசான அதீத சமயமெனவும், தத்துவ ஞான சித்தியுடையார் நிறுத்திய சமயங்கள் அகச் சமயங்களெனவும், கலைஞான சித்தியுடையார் நிறுத்திய சமயங்கள் அகப்புறச்சமயங்களெனவும், பிராகிருத விசேட புத்திமான்கள் நிறுத்திய சமயங்கள் புறச் சமயங்களெனவும் அறிஞரால் வழங்கப்படும்.

இனி, முதற் கடவுள் நிறுத்திய சமயம் ஒன்றேயாம் ஏனையோர் நிறுத்திய சமய வகைகள் நான்கும் ஒவ்வொரு வகையிற் பற்பல பகுதியுடையனவாய், அப்பகுதியுள்ளும் ஒவ்வொரு பகுதியிற் பற்பல பேதமுடையனவாய் விரிந்து நடக்கும். இன்னும் மேன்மேற் சமயங்களை நோக்கக் கீழ்க் கீழ்ச் சமயங்கள் பொய்யாகக் காணப்படும். அங்ஙனமாயினும், ஒவ்வொரு சமயங்களும் ஒவ்வோர் வகுப்பினராகிய அதிகாரிகளின் பொருட்டு வேண்டப்பட்டுப் பயன்படுவனவாகிச் சத்தியமாகவே போற்றிக் கோடற்பாலனவாம். உண்மையாகப் பார்க்குமிடத்து இறைவன் நிறுத்திய சமயமே எல்லாப் படியினுஞ் சத்தியமாம். ஏனையோர் நிறுத்திய சமயங்கள் மேன்மேல் நோக்கச் சத்தியமிகுந்தும் கீழ்க்கீழ் நோக்கச் சத்தியங் குறைந்துங் காணப்படும். அதுவன்றி முழுதும் அசத்தியமாய்க் காணப்படுஞ் சமயம் ஒன்றும் இல்லை யென்க.

கீழ்ச் சமயங்களில் நிற்பவர் அவைகள் சொல்லும் அறங்களை வழுவாது அநுட்டிப்பின், அந்த அநுட்டான பலத்தினால் மேற் சமயஞ் சார்ந்து, இப்படியே இறுதியில் முதற் கடவுள் நிறுத்திய அதீத சன்மார்க்கம் எய்தப்பெற்று, அது சொல்லும் ஞான சாதனங் கடைப்பிடித்து அநுட்டித்துத், தத்துவஞான சித்தி கைகூடிப் பரமுத்தி எய்துவர். இந்த நியாயத்தினால், மற்றைச் சமயகோடிகளெல்லாம் பரம்பரையில் முத்திக்கு வாயில்களாமென்றும் முதற்கடவுள் நிறுத்திய அதீத வருள்மார்க்கம் சாக்ஷாத்தாகவே முத்திக்கு வாயிலாமென்றும் அறிக. இன்னும், மற்றைச் சமயகோடிகளெல்லாம் இறைவன் அருட்சன்மார்க்கத்தினை அடைவித்தலாகிய முக்கியப் பிரயோசனத்தினைத் தருதலேயன்றி ஒவ்வோர் புண்ணியலோகப் பிராப்தியாகிய அவாந்தரப் பிரயோசனங்களையும் தனித்தனி தரவல்லனவாம்.

புறப்புறச் சமயபேதங்களும், புறச்சமய பேதங்களும், அகப்புறச் சமய பேதங்களும், முதற்கடவுள் அதிஷ்டிக்கும் தூல மாயா தத்துவங்களுள் ஒவ்வொன்றினையும், சூக்கும மாயா தத்துவங்களுள் ஒவ்வொன்றினையும், அதி சூக்கும மாயா தத்துவங்களுள் ஒவ்வொன்றினையும் முறையே தெய்வ ஸ்தானமாகவும் முத்தி ஸ்தானமாகவுங் கொண்டு நிற்கும். அகச் சமய பேதங்கள் முதற்கடவுள் அதிஷ்டிக்கும் ஸ்தடத்த வடிவங்களாகிற மாயா சுத்த தத்துவங்களுள் ஒவ்வொன்றினைத் தெய்வ ஸ்தானமாகவும் முத்தி ஸ்தானமாகவுங் கொண்டு நிற்கும். அதீத சன்மார்க்கமோ தத்துவாதீதமாயுள்ள முதற் கடவுளின் சொரூப சின்மய வெளியினையே தெய்வ சந்நிதியாகவும் முத்தி முடிபாகவுங் கொண்டு நிற்கும்.

இனி, இது முதற்கடவுள் நிறுத்திய பூரண சமயமென்றும், இவை தத்துவஞான சித்தியுடையார் முதலியோர்

நிறுத்திய சமய பேதங்களென்றும், இப் பொதுவுரையில் வரைந்து சொல்லோம். இலக்கணங்கொண்டு இலக்கியம் வரையறுத்து உணர்வார்போலச் சமயங்கள் சொல்லும் பொருட் பலாபலங்கொண்டு இது முதற் கடவுள் நிறுத்திய ஆதிப் பெருஞ்சமயம், இவை ஏனையோர் நிறுத்திய சோபான சமயங்கள் என்றும், இவற்றுள்ளும் இப்பிரபலத்தினால இது உயர்ந்தது, இதனாற்பலத்தினால் இது அதனிற் றாழ்ந்தது என்றும், சமய வரையறை யெய்தத் தாரதம்மிய விவேகஞ் செய்தல் விவேகிகள் கடனாம்.

இனிச் சமயங்களின் வன்மையும் மென்மையும் பகுத்தறிதற்கு அநுகூலமாகுங் கருவிகள் பல உண்டு. அவற்றுள், அவ்வன்மை மென்மை வேறுபாடுகள் இலகுவாக அறிய நிற்கும் பொதுக் கருவிகள் சில சொல்வாம். எந்தச் சமயம் தானே பரம்பொருளெனக் கூறுந் தெய்வத்திற்கு நால்வகை யோனி வாய்ப்பட்டுப் பிறந்து இறந்து வருங் கர்மகதி கூறிற்றில்லையோ அது வலியுடைய சற்சமயம். எந்தச் சமயம் தான் பரம்பொருளெனக் கூறுந் தெய்வத்திற்கு நால்வகை யோனிவாய்ப் பட்டுப் பிறந்து இறந்து செல்லுங் கர்மகதி கூறிற்றோ அந்தச் சமயம் மென்மையுடைய அசற்சமயம். எந்தச் சமயம் பிற சமயங்களும் சாஸ்திரங்களும் சொல்லும் பொருளெல்லாம் தன்கண் அடங்கக் கொண்டு அவை சொல்லாத பல நுண்பொருள் சொல்லி மேம்படுமோ அந்தச் சமயம் வலியுடைய சற்சமயம். எந்தச் சமயம் அவ்வாறின்றி ஏகதேசப் பொருள் மாத்திரமே சொல்லிக் கீழ்ப்படுமோ அந்தச் சமயம் மென்மையுடைய அசற்சமயம். எந்தச் சமயம் சமயங்களெல்லாஞ் சீவர்கள் கன்ம பேதத்திற்கேற்க முதற் கடவுள் நிறுத்தியனவென்னுமோ அந்தச் சமயம் வலியுடைய சற்சமயம். எந்தச் சமயம் தன்னைச் சுட்டி இவ்வொரு சமயமே கடவுள் நிறுத

தியது, எனைச் சமயங்களெல்லாம் மனிதர் தாமே கட்டி நடத்தின வென்றுமோ அந்தச் சமயம் மெலிவுடைய அசற் சமயம். எந்தச் சமயம் யாதொரு தெய்வங்கொண்டு வழிபாடு செய்யினும் முதற்கடவுள் அவ்வத் தெய்வங்களிடமாக நின்று அவ்வழிபாடு கொண்டருளி அருள் வழங்குவ ரென்றுமோ அந்தச் சமயம் வலியுடைய சற்சமயம். எந்தச் சமயம் தான் கூறும் சமய வழிபா டொன்றனையே கடவுள் கொண்டு அருள் செய்வர் அல்லாச் சமய வழிபாடெல்லாம் கடவுள் கொண்டு அருள் வழங்கார் அவ் வழிபா டெல்லாம் வீண் செயல்க ளென்றுமோ அந்தச் சமயம் மெலிவுடைய அசற் சமயம். இவையும் இவைபோல்வன அளவைகள் பிறவுஞ் சமய வன்மை மென்மை வரையறுத்தற் கநுகூலமாகும் பொது இலகு கருவிகளென்றறிக. நால்வகை யோனியுள் ஒன்றிற்பட்டுப் பிறந் திறவாமை கடவுட்டன்மையாதலாலும், அப்படிப் பிறந்திறத்தல் ஜீவ கதியாதலாலும், எல்லாச் சமயப் பொருளும் அடங்கக் கூறி அவை கூறாத நுண் பொருளுங்கூறி வைத்தல் வியாபக அறிவுத் தன்மையாதலாலும், சில பகுதிப் பொருளை அடங்க உரைத்து வைத்தல் சிற்றறிவுத் தன்மையாதலாலும், அறிவின் தாரதம்மியத்திற் பல பகுப்புடைய மாக்கள் பலர்க்கும் அவரவர்க் கேற்குமாறு கலைகளைத் தூல வருந்ததி நியாயம்பற்றிப் பருப் பொருளாகவும் நுண் பொருளாகவும் வகுத்துக்கொண்டு நல்லறிவுச் சுடர் கொளுத்துதல் போலப் பக்குவ பேதத்திற் பலவகைப் பட்டு நிற்கும் புருஷகோடிகள் அனைவர்க்கும் அவரவர்க்கு ஏற்கும் வண்ணம் உண்மை ஞானத்தினைத் தூல சூக்குமமாகப் பலவகைப் படுத்திக்கொண்டு கிரமத்தில் ஞானம் விளங்கப் பெரிதருள் செய்தல் பேரருளும் பெருநாயகத் தன்மையுமாய் முடிதலாலும், அப்படியன்றி ஒரு வகுப்பார்க்கு ஓர் வகைக் கலை அறிவு கொளுத்துதல் போல ஒருவகைப்

புருஷர்கள் மாத்திரைக்கே ஒரு ஏகதேச சமயம் வகுத்து அற்பஞானம் அருளுதல் ஏகதேச அருளும் ஏகதேச நாயகத் தன்மையுமாய் முடிதலாலும், எல்லாத் தெய்வங்கள் இடமாக நின்று வழிபாடுகள் கொண்டு அருளுதல் வியாபகவருட்பெருங் குணமாய் முடிதலாலும், ஓரிடத்து நின்று வழிபாடுகொண்டு அருள் செய்து அல்லாவிடத்து நின்று வழிபாடு கொண்டு அருள்செய்ய மாட்டாமை வியாப்பியவருட் சிறுகுணமாய் முடிதலாலும், இவை சமய வன்மை மென்மைகளை உள்ளபடி இலகுவாக அளந்தறிதற் கேற்ற அளவைக் கருவிகளாதல் காண்க.

முதற் கடவுள் புருஷர்கள் தத்துவ ஞானமெய்தி உய்யச் சமயம் வகுத்த அநாதிக் காலத்தில் அதனை ஒன்றாக நிறுத்தாமல் பல பேதப்பட இங்ஙனம் நிறுத்திய தென்னையோ வெனின், ஒரு கலாசாலையிற் கற்கும் மாணாக்கர்கள் பிறப்பினால் ஒரு தன்மை யுடையவராயினும், அறிவின் தீவிர மந்த விளக்க பேதத்தினால் பல வேறுபாடுடையரா யிருத்தல்பற்றி அவரைப் பல வகுப்பினராகப் பிரித்து அவ்வவைகளுக் கேற்ப நுட்பமாகவும் பரிதாகவும் கல்விகளைப் பலவகைப்படுத்துக் கற்பித்தல் போல, புருஷர்கள் பிறப்பினால் ஒருதன்மையரா யினும், பக்குவ பேதங்களை காரணமாகத் தீவிரமாகவும் மந்தமாகவும் விளங்கும் அறிவின் தாரதம்மிய விளக்க முடையரா யிருத்தலினால், கருணாநிதியாகிய கடவுள் அவர் அவர்க்கு ஏற்கும்படி நுண்பொருளுடையனவாகவும் பருப் பொருளுடையனவாகவும் சமயங்கள் பல நிறுத்தினார். அதனால், அது நீதியேயா மன்றிக் குற்றமாக மாட்டாதென்க. சிலர் இம்முறை தெரியாமல், கடவுள் ஆதியில் நிறுத்திய சமயம் ஒன்றே; மற்றைச் சமயங்களெல்லாம் காலந்தோறும் மனிதர் கடவுள் கருத்துக்குமாறாகக் கட்டி நடத்தின என்பர். அது பொருந்தாது. என்னை? கடவுள் சர்வ சத்தியை யுடைய

சுதந்திர ராதலினால், சத்தி சிறிதுடைய சுதந்திரமில்லாத மனிதர் கடவுள் சுதந்திர சங்கற்ப சத்தியைக்கடந்து அங்ஙனம் சமயங்கள் கட்டி நடத்தக் கருவியும் இடமும் காலமும் முயற்சியும் பெறுதல் கூடாமையாலென்க. அதுவேயுமன்றிப் பக்குவ பேதமுடைய புருஷர்களைப் படிவரிசையிலன்றி ஒரு படியில் வைத்து ஒப்ப அறிவு விளக்குதல் கடவுளின் பெரிய அருளொப்புரவுக்குக் குற்றமாய் முடியும்.

இனிச், சமயங்கள் தத்துவ ஆசார விசேட நுட்ப கதிகள் பற்றிப் பேதப்படினும், தர்க்க நூல்களுக்கெல்லாம் இணங்கும் லௌகிக சித்தாந்தங்கள் பற்றியும், நீதிநூல்களுக்கெல்லாம் இணங்குங் கொல்லாமை, புலாலுண்ணாமை, களவு செய்யாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை விரும்பாமை முதலிய நீதிகள் பற்றியும் பேதப்படாவாம். சில மிலேச்ச சமயங்கள் முற்சொல்லிய தர்க்க சித்தாந்த விரோதமாகும் அவ சித்தாந்தங்களும், நீதி விரோதமாகுங் கொலை, புலாலுணல், கள்ளுணல் முதலிய அநாசாரங்களும் சமயப் பொருளாகக் கொண்டிரைக்கும். ஆரிய கலைஞான சித்தாந்த அறிவுக்கும், நீதிக்கும் வெகு தூரமாய் ஒதுங்கின காரணத்தினால், அந்த அநாரிய சமயங்கள அவ சித்தாந்தங்களையும், ஜீவ காருண்ணிய தரும விரோதமாகும் அதர்மங்களையும், அங்ஙனம் சமயப் பொருளாகக் கொண்டிரைத்துத் தோஷப்படுவன வாயின.

சமய வேறுபாடுடைய மனிதர்களுள்ளே மேற்சமயிகள் கீழ்ச் சமயிகளை இளைய சகோதரர்களாகவும், கீழ்ச் சமயிகள் மேற்சமயிகளை மூத்த சகோதரர்களாகவும் மதித்து, ஒருவர்க்கொருவர் அன்பு செய்தொழுகலே விவேக நெறியாம். சமய தாரதம்மிய வகை சமயிகளுக்கு அறிவொற்றுமைக்குக் காரணமாவதன்றிக் கலக காரணமாக மாட்டாது. ஒரு பெரிய கலாசாலையில் கற்கும் மாணாக்கர்கள் அறிவு விளக்கத்தின்

தாரதம்மியத்தினால் மேல் கீழாகப் பேதப்பட்டிருக்கக் காண் கிறோம். அப்படிப் பேதப்பட்டிருக்கும் மாணாக்கர்களுள் மேல் வகுப்பு மாணாக்கர்கள் தங் கீழ் வகுப்பு மாணாக்கர் களைக் குறித்து இவர்கள் மேல் வகுப்பில் வந்து பாடங்களை கற்குஞ் செவ்வி என்று கூடுமோ வென்று அவர் ஆக்கங்கருதி அநுகூலங்கள் செய்தலை ஒழுக்க நெறியாகக் கொள்வர். கீழ்வகுப்பு மாணாக்கர்கள் மேல் வகுப்பு மாணாக்கர்களைக் குறித்து இவர் விசேட அறிவு விளக்கம் பெற்ற பெருமை யினாலன்றோ மேல் வகுப்பிற் பிரவேசிக்கப் பெற்றுப் பாட வித்தைகளைக் கற்றற்கு அதிகாரிகளாயினர். நாங்களும் அறிவு விளக்கம் விரைவிற்பெற்று மேல் வகுப்பினையடைந்து அந்த வியாபக பாட வித்தைகளைக் கற்கும் அதிகாரத்தினை இவர் போல எய்தல் வேண்டுமென்று கருதி முயலுதலை ஒழுக்க நெறியாகக் கொள்வர். அம் மேல் கீழ் என்னும் தார தம்மிய வகை அவர்கள் அறிவொழுங்கிற்கே சார்பமைய ஆத லல்லது கலக காரணம் ஆகுதல் இல்லை. இந்த முறையினையே மேற்சமயிகள் கீழ்ச்சமயிகளைக் குறித்து இவர்களும் ஞான விளக்கம் உண்டாகி எம்மைப்போல மேற்சமயப்படி ஒழுகு ங்காலம் என்று சித்திக்குமோ வென்று இரங்கி அவர்கள் ஆக்கங்கருதி வேண்டும் அநுகூலங்கள் செய்துவருதலும், கீழ்ச் சமயிகள் மேற்சமயிகளைக் குறித்து இவர் தவத்தின் வலியினாலன்றோ மேலான சன்மார்க்கம் எய்திக் கரும ஞான சித்திகளில் ஏற்றமும் மேம்பாடுமுடையராயினர், நாங்களும் தவ முயற்சினால் அம்மேற்சமயஞ் சார்ந்து கரும ஞான சித்திகள் அவர்போலப் பெரிதாக எய்தல் வேண்டுமென்று ஏக்கற்று முயலுதலுமே அறநெறியாம். இப்படிச் செய்தலை விட்டு மேற்சமயிகள் கீழ்ச் சமயப் பொய்ம்மைகளை அச்சமயி களுக்கு முன் எடுத்துப்பேசி இகழ்ச்சிசெய்து அவர்களுக்குக் கோபமூட்டிக் கலகம் விளைத்தலும்; கீழ்ச்சமயிகள் மேற்

சமயப் பொருள்கள் தாங் கிரகிக்கக்கூடாத நுட்பமும், தஞ்சமயங்களிலில்லாத நூதனங்களுமாயிருத்தல் காரணமாக அம்மேற்சமயங்களை மனம்போனபடி தூஷித்து அம்மேற்சமயிகளுக்கு மனவருத்தம் உண்டாக்கிக் கலாம் விளைத்தலும் ஒழுக்க நெறியாக மாட்டாவாம். இன்னும், மேற்சமயிகள் கீழ்ச்சமயிகளுக்கு அவர் சார்ந்து நிற்குஞ் சமயப் பொய்ம்மை காட்டி அவரை மேலாயுள்ள தஞ்சமயங்களில் வழிப்படுத்தி உய்யச்செய்யுங் கருத்துடையராங்கால், அவரோடு உலகியல் ஒழுக்க வழியால் அன்புசெய்து கலந்து நட்புடையராய்ப் பொதுநிலை நின்று நியாய நெறியால் சமய சம்பாஷணஞ் செல்ல மெல்லச் செய்து சமயப் பொய்ம் மெய்களை உள்ளபடி அவர் தெளிய விவேகாநுபவத்தை அவர்க்குக் கொளுத்தி அப்படிச் செய்தலே புத்தியாம். கீழ்ச்சமயிகள் அங்ஙனஞ் சமய சம்பாஷணைத் திறத்தால் தங்களிடத்து உதித்துப் பிரகாசிக்கும் விவேகக் கண்களால் தங்கள் சமயப் பொய்ம்மையும், மேற்சமய மெய்ம்மையும் உள்ளபடி காணப்பெறுங்கால் தஞ்சமயப் பற்றைவிடுத்து, தாம் மெய்யெனக்கண்ட மேற்சமயஞ் சார்ந்து உய்யு முபாயநிலை அறிவாம்.

இனி, அப்படி உண்மைகண்ட பின்னும், தாமபிமானத்தினால் மேற்சமயம் பற்றி உய்ய முயலாமல் தாஞ் சார்ந்து நிற்குந் தம சமயங்களே சன்மார்க்கமென்று மனச்சான்றுக்கு விரோதமாகப் பொய்ப்பாராட்டுச் செய்து மேற்சமயங்களை அவமதித்துக் கட்டொழுக்கம் பூணுதல் பாவமாம்.

இது இங்ஙனம் நிற்க, சத்தியமிக்க மேற்சமயிகள் சத்தியங் குறைந்த கீழ்ச்சமயங்களைப்பற்ற ஒருக்காலும் சம்மதியார். ஆரியர்களாகிய வைதிக மேற்சமயிகள், இக்கலியுகத்திற் சிலர்கொண்டு அனுஷ்டிக்கும் அநாரியமாகிய விவிலிய சம்பந்தமான கீழ்ச்சமயங்களிற் பிரவேசித்துக் கெடக்காண்

கின்றோம். பிருகிருத சம்பந்தம்பற்றி அக்கெடுதியைச் சுட்டிச் சில சொல்வாம். ஆரியர்கள் சமய நூல்களாகக் கொண்ட வேதாகம முதலிய சாஸ்திரங்கள் சித்த சுத்தியைத் தரும் விதி விலக்கு நிறைவும், தர்க்க முதலிய கலைஞான சம்பந்தமும், பதி பசு பாச பதார்த்த விசார பூரணமும், தத்துவ ஞானசித்தி சாதன பூரணமும், சகல புருஷ பக்குவானுகூல கருமஞான சித்தி முத்தி சாதனோபாய பூரணமும், சமஸ்த ஜீவகாருண்ணிய நீதி மார்க்கபூரணமும் உடையன. அநாரியர் சமய நூலாகக் கொண்ட விவிலிய முதலிய நூல்கள் சித்த சுத்தியைத் தரும் விதிவிலக்குக் குறைவும், தர்க்க முதலிய கலைஞான விரோதமும், ஜீவேசுவர ஜகத பதார்த்த விசாரக் குறைவும், தத்துவஞான சித்தி சாதனக் குறைவும், ஏகதேச புருஷானுகூல கரும சாதனோபாயமும், மனித ஜாதி மாத்திரமான ஜீவ காருண்ணிய நீதிமார்க்கமும் உடையன. இந்த முறைமைகளால் ஆரிய சமயங்களும் அநாரிய சமயங்களும் தம்முள்ளே வித்தியாசம் அதிகம் உடையவைகள் என்பது பிரசித்தம்.

வைதிக சமயிகள் தங்கள் சமயக் கொள்கைகளோடு இங்ஙனம் வித்தியாசம் பெரிதுடையனவாய் மிகவும் கீழ்ப்பட்டிருக்கும் விவிலிய சமயங்களை நல்லனவென்று பற்றுதற்கு நியாயஞ் சிறிதும் சித்திக்காது. இனி, ஆரிய சமயிகளிற் சிற்சிலர் இக்காலத்தில் கீழான விவிலிய சமயங்களிற் பிரவேசித்தற்குக் காரணம், வைதிக சமய விதிவிலக்குகளாகிய தருமங்கள் அநுஷ்டித்தற்கு அரிய பண்டிதக் கொள்கையாதலும், விவிலிய சமயக்கொள்கைகள் அநுஷ்டித்தற்கு எளிய பாமரக் கொள்கைகளாதலும், மனம் போகுமாறு போய் இச்சா போகங்களை அநுபவித்தற்கு அநுகூலமாயிருத்தலுமே யாம். அநித்தியமும், துக்கமும், இழிவும், பழியு முள்ள

பொய்ப்போகங்களை அநுபவித்தற் பொருட்டு நித்தியமும், சுகமும், உயர்வும், புகழுமுள்ள வைதிக சமயங்களைக் கைவிட எண்ணுதல் அந்தோ! மேன்மக்களாகிய ஆரியர்களுக்கு எவ்வளவு மதிகேடு!! எவ்வளவு அவமதிப்பு!! எவ்வளவு பழி!! எவ்வளவு பாவமாம்!!

வைதிக சமயிகளுள்ளே வேறுசிலர் தரித்திரக் கொடுமையினால் அன்னவஸ்திரம் பெற்று உடல் ஓம்பும் பொருட்டும் விவிலிய சமயங்களிற் பிரவேசிக்கின்றார். தொழின் முயற்சிக் குறைவினால் தரித்திரம் உண்டாகும். தொழின் முயற்சி செய்து பொருளை ஈட்டின் அது கெடும். செல்வவாழ்வு உண்டாம். இதற்குப் பயந்து சாதியாசாரம் சமயாசாரம் விட்டுக் கீழான புன்சமயங்களிற் பிரவேசித்துப் பதிதராதல் பெரியோர் மதிகேடு! இப்படி மதிகெட்டு விவிலிய சமயங்களிற் பிரவேசித்துப் பதிதத்தன்மை யெய்தினவர்களுள்ளே ஒரு சிலர், போக ஆசையும் பொருளாசையும் அநுபவத்தினாலும் பொருட்பேற்றினாலும் நீங்க, மோகந்தெளிந்து அறிவு வரப்பெற்றபின், ஆரிய மேன்மக்கட் பேற்றினையும், வைதிக சற்சமயப் பேற்றினையும நல்வினையாற் பெற்றிருந்த நாம், ஐயோ! அற்ப துராசை தரித்திரங் காரணமாக மயங்கி அறிவு கெட்டு அப்பேறுகளைக் கைவிட்டு, இந்த இழிந்த சமயங்களில் வீழ்ந்து குலங்கெட்டோம்! குணங்கெட்டோம்! நலங் கெட்டோம! நற்சமயங் கெட்டோம்! என்று பச்சாத்தாபப் படுகின்றனர். இவர்களுள்ளே சிலர், தங்கள் முன்னைச் சமயங்களைச் சாரக்கருதி முயன்ற வழியும், வைதிக சமயிகள் சாதி கெட்டுச் சமயங்கெட்டு நீதிகெட்டு நிலைகுலைந்து பதிதரான நீங்கள் எங்களோடு சேரவொட்டோம் என்று ஒதுக்க, என் செய்வோம்! தெய்வமே! இதுவும் படக்கடவமோ! என்று கவலைக் கடலுள் மூழ்குகின்றார்.

# பிரதோஷ மகி

பழனி, சித்தாந்த சரபம், காசிவாசி, சிவஸ்ரீ
ஈசான சிவாசாரியார் அவர்கள்.

முன்பு ஒரு காலத்தில் சிவபெருமானுடைய திருவடியில் மிகுந்த அன்புடையவரான துருவாச முனிவர் சிவபெருமானை விதிப்படி மெய்யன்புடன் அர்ச்சித்த பூவொன்றை ஐராவதயானையின் மீதேறித் தமக்கெதிரே வந்த தேவேந்திரன் மீதுள்ள கருணையினாலே அவனுக்குத் தர விரும்பி நீட்டினார். அதுகண்ட தேவேந்திரன் முனிவர் பெருமானுடைய பொறுமையையும், இறைவன் மேல் சாத்தியதனால் தூய்மை (சிவநிர்மால்யம்) ஆன புஷ்பத்தின் மகிமையையும், தமது செல்வச் செருக்கினால் உணராது, யானை மீதிருந்தபடியே அங்குசத்தால் அந்தப் பூவை வாங்கி யானையின் மத்தகத்தின்மீது வைத்தான். யானை அந்தப் புட்பத்தைக் கீழே தள்ளிக் காலால் மிதித்தது. அதுகண்ட முனிவர் இந்திரனை நோக்கிக் கூறுவார். இந்திரா! உன் செல்வமெல்லாம் சிவபெருமானால் அருளப்பட்டதென்பதனை ஒரு சிறிதும் உணராது சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளில் அர்ச்சித்த சிவநிர்மாலியமான மலரை நீ சாமானியமாக மதித்து யானை மீதிருந்தவண்ணமாகவே அங்குசத்தாலேற்று வாங்கினாய். எளியதாக எண்ணி யானைப்பிடரியின்மீது வைத்தாய். அதுவும் கீழேதள்ளிக் காலால் மிதித்தது. அதுகண்டும் வருந்தாது செல்கின்றாய், உனது பக்கத்திலுள்ள செல்வமன்றோ உன்னை இவ்வாறு மதிமயங்கச் செய்தது. ஆதலால் காமதேனு, கற்பகதரு, சிந்தாமணி முதலிய உனது செல்வமெல்லாம் உன்னை விட்டு நீங்கக் கடவது என்று சபித்தனர்.

அந்தச் சாபத்தால் அத்தகைய செல்வங்களெல்லாம் இந்திரனை விட்டு நீங்கித் திருப்பாற்கடலிற் சென்று ஒளித்தன. இங்ஙனம் இவைகள் நீங்கியதனால், இந்திரனும் அவனைச்சார்ந்த தேவர்களும் உயிரில்லாத உடம்பைப்போலவும், திருநீறு இல்லாத நெற்றியைப்போலவும், திருக்கோயிலில்லாத ஊர் போலவும் தோற்றப் பொலிவிழந்து துன்புற்று வருந்தினார்கள். வலிமையும் இழந்தவரானார்கள். இவர்களுடைய வலியிழந்த நிலையுணர்ந்த இராக்கதர்கள் அப்போது தேவர்களுடன் போர்புரிய வந்தனர். அவுணர்களோடு போர்புரிய மாட்டாத தேவர்கள் புறங்காட்டி ஓடிச்சென்று பிரமதேவருடன் திருமாலையடைந்து நிகழ்ந்தது கூறினர். அதுகேட்ட திருமால் "பாற்கடலிலுள்ள அமிருதத்தைக் கடைந்தெடுத்து உண்டால் நீங்கள் போரில் சாவாது வெற்றியடைந்து இன்புறுவீர்கள்" என்று கூறினார். அதுகேட்ட தேவர்கள், திருப்பாற்கடல் கடைதலாகிய அத்தொழிலைப் பெருங்காரியத்துக்குத் துணைவராகத் தங்கள் பகைவர்களாகிய அவுணர்களையும் இனிய சொல்லினாலே மகிழ்வித்து அழைத்துக்கொண்டு சென்று, சிவபெருமான் ஒருவர் இருக்கிறார் என்பதனையும், அவரது நிர்மாலியத்தை அவமதித்ததே இத்துன்பங்களுக்கும் காரணமென்பதனையும் மறந்து, தங்களை நாடிய துன்பத்தை விலக்கிக்கொள்ளவும், எவ்வளவு பெரிய இன்பத்தை வருவித்துக்கொள்ளவும் வேண்டிய வலிமை அத்தனையும் தங்களிடத்திலேயே இருப்பதாகக் கருதிச் சிவபெருமானது திருமுன்பு சென்று வணங்கி அவருடைய அநுக்கிரகத்தை வேண்டாமலும், அவரது அநுமதியைப் பெறவேண்டிய எண்ணமே ஒரு சிறிதும் இல்லாமலும், தாங்களே ஒப்பற்ற பெருந்தலைவர்களென்று நினைந்துகொண்டு மந்தரமலையை மத்தாகவும், வாசுகியென்ற பாம்பைக் கயி

றாகவுங்கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்தனர். அங்ஙனம் கடையும்போதுள்ள அலைபத்துக்கு ஆற்றாத வாசுகியென்ற பாம்பு கொடிய நஞ்சை உமிழ்ந்தது. அந்த நஞ்சு, கண்டவர்களையே கொல்லும் அத்துணை வேகமுடைய கொடியதாயிருத்தலால் அதுகண்ட தேவர்கள் பயந்து ஓடிச்சென்று திருக்கைலாச மலையை அடைந்து திருநந்திதேவரிடம் முறையிட்டனர். அதுகேட்ட திருநந்திதேவர் சிவபெருமான் சந்நிதியிற் சென்று விண்ணப்பித்தனர் பெருமான் “அவர்களை அழைத்துவருக” என்று திருவாய் மலர்ந்தனர். அங்ஙனமே சென்ற தேவர்களும் அசுரர்களும் பெருமான் திருமுன்பு சென்று தமக்கடுத்த துன்பத்தை எடுத்து விண்ணப்பித்துக் கொண்டனர். பலநாள் தம்மை எண்ணாது செருக்குற்றே வாழ்ந்துவந்தும், ஒரோர்கால் தங்கள் துன்பத்துக்கு அஞ்சித் தம்மைவந்தடையின் அங்ஙனம் பலநாள் மறந்த குற்றத்தைப் பொருட்படுத்தாது, அப்போது தம்மையே சரணமென்றடைந்த ஒன்றனையே கண்டு மகிழ்ந்து அவர்களுக்கு மழைபோல இன்னருள் சுரக்கும் பெருமான், தேவாசுரர்களை நோக்கி “அஞ்சாதீர்கள்” என்று கூறியருளி அங்ஙனஞ் செருக்கற்றுத் தமது அடியவர் கூட்டத்துள் ஒருவரும், நறுமலர்கள் கொய்து தமது திருவடியில் அர்ச்சிப்பவரும் அங்ஙனம் அர்ச்சனை செய்ததனால் நிர்மால்யமான அந்த நன்மலரின் அருமையை யுணர்ந்தவருமான சுந்தரரை நோக்கி, சுந்தர! நீ சென்று அத்தகைய கொடிய விஷத்தை எடுத்து வருதி என்றருளினர். அவர் அங்ஙனமே சென்று திருக்கரத்தை நீட்டினர்; விஷம் வலியடங்கி ஒரு சிறிய நாவற்கனியளவாகத் திருக்கரத்தில் வந்தது. அதனைப் பெருமான் திருமுன்பு கொண்டுவந்தனர். இதை யாது செய்வோம் என்று பெருமான் தேவர்களைக் கேட்க, தேவர்கள் பெரு

மானே! இது விஷமாய் இருந்தாலும் முதற்பாகம் தேவரீருக்கே உரியது; ஆதலால் தேவரீரே திருவமுது செய்தருளல் வேண்டுமென்று வேண்டினர். அதுகேட்ட கருணைவடிவாகிய சிவபெருமான் ஆன்மாக்களுடைய துன்பத்தை நீக்கி இன்பத்தை அருள்பவர் தாமே என்பதனை நாமெல்லோரும் அறிந்துய்யும்வண்ணம் அந்த விஷத்தை யுண்டருளினர். அதனால், சிவபெருமான் நீலகண்டர் எனப் பெயர்பெற்றார்.

அப்போது எல்லா உயிர்களிடத்தும் உயிர்க்குயிராகிய தாம் உண்ட விஷம் எல்லாரையும் வருத்தாதிருத்தற்பொருட்டுச் சிவபெருமான் மௌனமாக வீற்றிருந்தனர். அப்போது எல்லோரும் உறைவருந்தாது சிவபெருமானைப் பூசித்தனர். அந்த நாளே ஏகாதசியாம். அங்ஙனம் ஆலகால விஷத்தையே அமுதாகவுண்ட சிவபெருமான், தேவர்கள் செய்த சிவபூசைக்கிரங்கி அவர்களுக்கு அமுதத்தை வழங்கினர். மற்றைநாள் தேவர்கள் தங்கள் பூசையை முடித்துக்கொண்டு உணவருந்தினர்; அந்த நாளே துவாதசியாம். அடுத்தநாள் சூர்யாஸ்தமனத்துக்குமுன் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் திரயோதசியோடு கூடிய நாளிலே, இதுவரை துன்பத்திலாழ்ந்து வருந்திய எல்லோரும் இன்பம் அடைதற்பொருட்டு, உமாதேவியார் காண சிவபெருமான் கைபிலே டமருகமேந்தி ஒருசாமம் (ஏழரை நாழிகை) திருநிருத்தஞ் செய்தருளினர்; அந்தக் காலமே பிரதோஷகாலமெனச் சிவாகமங்கள் கூறும்.

இங்ஙனம், எல்லா உயிர்களுக்கும் இன்பத்தைத் தருதற்கென்றே பெருமான் இன்பத் திருக்கூத்தியற்றும் ஒரு அரிய நன்னாளாதலின், இந்த நாளிலே திருக்கோயிலிலே சென்று விதிப்படி மெய்யன்புடன் வழிபடல் வேண்டும்.

## பிரதோஷ விரதம்.

இந்தப் பிரதோஷம் மாதந்தோறும் இருமுறை சுக்கில பக்ஷம் (வளர்பிறை) கிருஷ்ணபக்ஷம் (தேய்பிறை) களில் வருவது. பிரதோஷத்தன்று சனிக்கிழமையும் சேர்ந்து வருவது மிகவும் சிறப்பானநாட்களாகக் கருதப்படும். பிரதோஷ விரதம் நோற்க விரும்புவோர் சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் ஏதேனும் ஒன்றில் வரும் சனிப்பிரதோஷ முதலாக அனுட்டித்துப் பயன் பெறுவார்களாக.

—சிவாகம வித்யா.

## கட்டளைக் கலிப்பா.

———:———

தில்லை வாழுஞ்ச பாபதி பூசனை
திருச்சிற் றம்பல தேசிகர் செய்திடச்
சொல்லை மாற்றிய சேகண்டி யோசையுந்
துங்க மாகிய சங்க முழக்கமும்
வல்லை யார்க்குங்கைத் தாளமுங் கொத்தரு
மவ்வரியி னோசையுந் தேவாரப் பண்களு
மெல்லை தீரவிவ் வண்டப் பரப்பெலா
மேகி யப்புறம் போகி முழங்குமே.

— சீனிப்புலவர்.

உ

சிவமயம்.

# ஆலய வழிபாட்டில் நாம் அறியவேண்டியவை.

---

நம்மிற் பலர் 'ஆலய வழிபாடு வேண்டாம்' என்கின்றனர். அதற்கு அவர் கூறும் காரணங்கள் பல. அக்காரணங்கள் எல்லாம் ஏற்றுக்கொள்ளக் கூடியன அல்ல. குற்றஞ் செய்தல் இயல்பே. குற்றம் செய்தலினின்று நம்மை நீக்கிக்கொள்ள முயலுதலே தகுதி. சிலர் கோயிலுக்குச் செல்கின்றனர். அங்கே செல்லுதல் எதற்காக என்பதை அவர் சிறிதும் சிந்திப்பதில்லை. சிந்திக்க வாய்ப்பு அளிப்பாராயின் அவர் அவ்வாறு செய்யார். குளிக்கப்போய் எவரும் உடம்பு முழுவதும் சேற்றைப் பூசிக்கொள்ள மாட்டார். நல்ல நீர் உள்ளதெனக் கருதிக் குளத்திலிறங்குவர். அக்குளத்து நீர் வெளிக்குத் தெளிந்த நீர் போலக் காணப்படும். அதை நம்பிச் சிலர் துறை அறியாமல் இறங்குவர். சில சமயம் முழங்கால் வரையிற் கால் புதைந்தும். குழைசேறு உள்ள இடமாகவும் அமையும். அது குளத்தின் மேற் குற்றமா? நம்முடைய குற்றம் என்பதை நாம் ஒப்புக்கொள்ளமாட்டோம். ஏன்? நம்மிடத்தில் நமக்குள்ள மதிப்பு. பிறர் மேற் குற்றம் சுமத்தவே நாம் முற்படுவோம். நாம் நம்மை மதிப்பதுபோல் பிறரை மதிக்க மனம் பொறுப்பதில்லை. இந்த நிலை நமக்குவர நல்ல முயற்சி வேண்டும்.

ஒருவர் கும்பகோணத்திலிருந்து சென்னைக்குச் செல்ல விரும்புகிறார். விருப்பம் என்னவோ நல்லதுதான். பல பக்கங்களிலும் பிரிவுச்சாலைகள் அவர் நிற்குமிடம். ஏதோ ஒரு

சாலையில் செல்கிறார். செல்லுமுன் வழியறிந்த ஒருவரை அவர் சென்னைக்குச் செல்லும் சாலை எது? என்று கேட்டிலர். கேளாமல் சென்றார். வெகுதூரம் சென்றுவிட்டார். பின்பு அங்கே ஒருவரைக் கண்டார். ஐயா, இதுதான் சென்னைக்குச் செல்லும் வழியோ எனக்கேட்டார். இது அல்ல, வழிதப்பி வந்துவிட்டீரே என்றார் அவர். திரும்பிவந்து வேறுவழியிலே செல்லத் தொடங்கினர். இப்படிப் பல வழிகளிலும் சென்று சென்று தடுமாறினர். சென்னைக்குச் செல்லும் உண்மை வழி தவிர அவர் எல்லாச் சாலைகளிலும் நடந்து நடந்து இளைத்தார். திசைதப்பிவிட்டதே என்றார். ஆனால் தான் தப்பிச் சென்றதாக அவர் உணர்ந்திலர். பின்பு சென்னைக்குச் செல்லும் வழியறிந்த ஒருவரைத் துணையாகக்கொண்டு சென்று தன் எண்ணம் நிறைவேறப் பெற்றார்.

இதனை ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் தம்முடைய திருவாரூர் நான்மணி மாலையிலே 'சென்னெறி பிழைத்தோன் திசை மயங்கிற்றென மொழிகுவது ஒப்ப' என அருளுகின்றார்கள். இந்த உவமை நயம் கற்றோர் உள்ளத்து நின்று சிந்திக்கச் சிந்திக்கத் தேனூறும். கற்றோர் நினைவிலே நின்று நிலைக்கும் சில நயங்கள் மற்றோர் அறியமாட்டார். இவர் அறியாது போவாராயின் அக் கற்பனை நயமில்லாது போய்விடுமா? கற்றோரால் அநுபவிக்கப்படாமல் ஒழியுமா? இல்லை, இல்லை.

இனி, நாம் இருக்கிறோம், கோயில் இருக்கிறது, வழிபாட்டு முறைகள் உள, அவ்வழிபாட்டு முறைகளைக் கூறும் நூல்கள் பல உள, அவற்றைக் கற்றோர் பலர் உளர். ஆனால், இவைகளைக் கையாண்டு பயன்படுத்திக்கொள்ள எல்லோரும் முற்படுவதில்லை, முயல்வதில்லை. கோயில் பயனில்லை, வழிபாட்டு முறை பயனில்லை, நூல்களாற் பயனில்லை, கற்

ஞோரால் பயனில்லை என வாய் கூசாமல் பேசுவோம். இப்படி வம்பளக்கமட்டும் தான் மனித உடம்பு பெற்றேமா? இவ்வுடம்பைக் கொண்டு நல்லது செய்ய வேண்டாமா? 'தீது ஒழிய நன்மை செயல்' என்று ஔவையார் கூறியதைச் சிந்திக்கிறோமா?

இனி, திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுகிறார்கள். 'நிலை பெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீ வா' என்கிறார்கள். வந்த நெஞ்சை நோக்கி 'நித்தலும் எம் பிரானுடைய கோயில் புகு' என அருளுகிறார்கள். புகுகின்ற நெஞ்சமே! நீ 'காலம் பெறவே புகு' என்கிறார்கள். அதைத்தான் 'புலர்வதன் முன்' என்றார்கள். சென்றால் செய்ய வேண்டுவன யாவை? எனச் சிந்தித்துச் செய் என்று சொல்லுபவர்கள் போலக் கட்டளையிடுகிறார்கள். அலகிடு, மெழுக்கிடு, பூமாலை புனைந்தேத்து, புகழ்ந்து பாடு என்று ஒவ்வொன்றாகப் படிப்படியாகச் செய்யவேண்டியவைகளைச் செய்யப் பணிக்கிறார்கள். தலையாரக்கும்பிடு, கூத்தும் ஆடு, சங்கரா சய போற்றி போற்றி எனச் சொல், அலைபுனல் சேர் செஞ்சடை எம் ஆதீ! ஆரூரா! ஆரூரா! என்று பலகாலும் அழைவாய், அதனால், பெரும்பயனைப் பெறுவாய் என்று உபதேசிக்கிறார்கள்.

இதனால், கோயிலுக்குச் செல்லும் போது நெஞ்சை ஒருவழிப்படுத்திக்கொள்ள வேண்டும். மனத்தை அலையவிடலாகாது இங்ஙன பயிற்சிவரப் பலநாளும் கோயிலுக்குச் செல்லவேண்டும். பலகாலும் செல்ல வேண்டும். அப்பழக்கம் வழக்கமாகும். காலந்தோறும் செல்லல், காலம் பெறவே செல்லல் என்ற செயல்களை ஒழுங்காக அமைத்துக்கொள்ள வேண்டும். எதனைச் செய்தாலும் ஒரு ஒழுங்கு இருத்தல் வேண்டப்படும். நல்ல பயிற்சி இல்லாவிடில் ஒழுங்கு பெற இயலாது என அறிகிறோம். பல இடங்களிலும் அலைந்து திரிந்து வந்த நாம் கைகால்களைச் சுத்தம் செய்து கொள்ள

வேண்டும். பல பேச்சுக்களை நல்லதும் தீயதுமாகிய சொற்களையெல்லாம் பேசிவருகிறோமே! தீய சொற்களைப் பேசிய வாயை அலம்பவேண்டும். அதற்காகவே வாய் கொப்பளிக்கிறோம். ஆசமனம் பண்ணுகிறோம்.

பின்பு, திருநீற்றைப் பூசிக்கொண்டு கோயிலின் உள்ளே போதல் வேண்டும். போகும்போது கடவுளைச் சிந்தை செய்து கொண்டுதான் போதல் வேண்டும். உலாவுவதன் பொருட்டு நாம் கோயிலுள் செல்லவில்லை. பல தீயோர் சொல்லத்தகாத சொற்களைச் சொல்லிச் செல்வர். கோர்ட்டு வியவகாரம், ஊர் வியவகாரம், வம்பளப்புச் சண்டைகள் முதலிய எத்தனையோ செய்திகளை அங்கே நல்லவர்களாகிய பிரபுக்களும், உத்தியோகஸ்தர்களும், வியாபாரிகளும, எண்ணிறந்ததொழிலாளர்களும்,முதலாளிகளும் பேசியே செல்வர். மூர்த்திகளைப் பார்த்தது தரிசிப்பதுமில்லை. பலர் நமஸ்காரம் பண்ணுவது நல்லோருக்கு நகை விளைக்கும். இடப தேவருக்குப் பின்புறத்திலே தான் நமஸ்காரம் பண்ணவேண்டும். இடபதேவருக்கு முன்பு ஒருக்காலும் நமஸ்காரம் பண்ணலாகாது. பண்ண விதியுமில்லை. அறிவில்லாமல் சிலர் செய்து வருவார்களானால் அது விதியாகுமா? இதுபோல அறிவில்லாமல் பலர் செயயத்தகாத பல செயல்களைக் கோயில் வழிபாட்டில் செய்து வருகின்றனர். அவைகளெல்லாம் விதியா? தலைவிதி என்றேதான் கொள்ளவேண்டும்.

இனி, சிவலிங்கப் பெருமானுக்கும் இடபதேவருக்கும் குறுக்கே செல்லலாகாது. அர்த்த மண்டபத்திலே உள்ள இடபதேவரையே குறித்தது இது. ஏனைய ஆவரணங்களில் உள்ள இடபதேவரை யன்று. மற்றொரு அறிவில்லாத செயல் நம்மனோரால் மிகுதியாகச் செய்யப்பட்டு வருகிறது. அச்செயல் இன்னதென அறிய விரும்பும் அன்பர்களுக்கு எடுத்துக்காட்டவேண்டியதேயாம். சண்டேசுவர நாயனார் சந்நிதியில் துணியைக் கிழித்துப் போடுதல், துணியிலிருந்து நூலை எடுத்தெடுத்துப் போடுதல ஆகிய பெருங்குற்றம் யாவராலும் நன்றாகத் தடுக்கப்படவேண்டியதே.

[ இன்னும் வரும். ]

உ

சிவமயம்.

# பாப்பா நீதிப் பாட்டு.

1 செல்வக் குழந்தையான பாப்பா—நீ
நல்ல குழந்தையாவாய் பாப்பா.

2 காலையில் எழுந்திரு பாப்பா—நீ
கடவுளை வணங்கிடுவாய் பாப்பா.

3 ஓடி விளையாடு பாப்பா—நாளும்
ஓய்ந்திருக்க லாகாதே பாப்பா.

4 காலைக் கடன்முடி பாப்பா—நன்றாய்க்
காலை யலம்பிடுவாய் பாப்பா.

5 பல்லை விளக்கிடுவாய் பாப்பா—பின்பு
பழையது சாப்பிடுவாய் பாப்பா.

6 சிவசிவ என்றுசொல் பாப்பா—நீற்றைச்
சிந்தாமல் பூசிக்கொள் பாப்பா.

7 பிள்ளையாரைக் கும்பிடுவாய் பாப்பா—வெள்ளத்
துன்பங்கள் விலகிடுமே பாப்பா.

8 திருமாதைக் கும்பிடுவாய் பாப்பா—செல்வந்
தருவாளவள் மிகுதியாகப் பாப்பா.

9 கலைமகளை வணங்கிடுவாய் பாப்பா—நல்ல
கல்விகள் நிறைந்திடுமே பாப்பா.

10 குருபாதம் தொழுதிடுவாய் பாப்பா—எல்லாத்
திருவும் பெருகிடுமே பாப்பா.

11 பெரியோரை வணங்கிடுவாய் பாப்பா—தரையில்
பெருகுமே ஆயுள் மிகப் பாப்பா.

12 பள்ளிக்குச் செல்லுவாய் பாப்பா—வழியில்
துள்ளித் திரியாதே பாப்பா.

13 படிப்பிலே கவனம்வை பாப்பா—பக்திப்
பாட்டுகள் கற்றுக்கொள் பாப்பா.

14 சித்திரம் எழுதக்கல் பாப்பா—பொல்லாக்
குத்திரம் வேண்டாமே பாப்பா.

15 முத்தைப்போல் பத்தியாய்ப் பாப்பா—மனம்
வைத்துநீ எழுதுவாய் பாப்பா.

16 சரித்திரம் கணக்குகள் பாப்பா—பூமி
சாஸ்திரம் கற்றுக்கொள் பாப்பா.

17 கதைசொல்லத் தெரிந்துகொள் பாப்பா—விதை
வைக்கவும் கற்றுக்கொள் பாப்பா.

18 குளித்து முழுகுவாய் பாப்பா—தூய
ஆடைகள் கட்டிக்கொள் பாப்பா.

19 அத்தந்தான் சோறிடும் பாப்பா—மெத்தச்
சோம்பலாய்த் திரியாதே பாப்பா.

20 தலைவாரிப் பூச்சூடு பாப்பா—நல்ல
கலையெல்லாம் கற்கவேணும் பாப்பா.

21 பகலிலே தூங்காதே பாப்பா—நன்றாய்
இரவினில் தூங்குவாய் பாப்பா.

22 பொய்சொல்லப் பழகாதே பாப்பா—தினம்
மெய்சொல்லப் பழகுவாய் பாப்பா.

23 கோலங்கள் போடுவாய் பாப்பா—என்றும்
சீலங்கள் தப்பாதே பாப்பா.

24 தந்தைசொல் மந்திரம் பாப்பா—பெற்ற
தாயின்சொல் வாசகம் பாப்பா.

25 நல்லோரை நாடுவாய் பாப்பா—கெட்ட
பொல்லாரைச் சேராதே பாப்பா.

26 ஏழைக்குச் சோறிடு பாப்பா—பொல்லாக்
கோழைத் தனம் ஆமோ பாப்பா.

27 தாய்மொழி தமிழ்மொழி பாப்பா—நல்ல
தவமொழி தமிழ்மொழி பாப்பா.

28 பூச்சிகள் பிடியாதே பாப்பா—நீ
பூனையை அடியாதே பாப்பா.

29 கொள்ளி கொளுத்தாதே பாப்பா—வீண்
கோளினை மூட்டாதே பாப்பா.

30 சாலையில் ஓடாதே பாப்பா—பாட
சாலைக் கொளியாதே பாப்பா.

31 ஊஞ்சலில் ஆடுவாய் பாப்பா—நாளும்
வாஞ்சையாய்ப் பாடுவாய் பாப்பா.

32 கோபமாய்ப் பேசாதே பாப்பா—பொல்லாப்
பாவங்கள் சேர்ந்திடும் பாப்பா.

33 செந்தமிழ் சிவமொழி பாப்பா—தெய்வச்
செந்தமிழ் போற்றிக்கல் பாப்பா.

34 செந்தமிழ் தேன்மொழி பாப்பா—இன்பச்
செந்தமிழ் பான்மொழி பாப்பா.

(தொடரும்)

சிவஞானக் களஞ்சிய வெளியீடு.

உ

சிவமயம்.

# முத்தி பஞ்சாக்கர மாலை

# ஸ்ரீநமச்சிவாயமூர்த்தி தாராட்டு

# திருவாவடுதுறைத் தேசிக சோபனம்



விரோதி — சித்திரை

1949

உ

திருச்சிற்றம்பலம்.

## தேவாரம்

கங்கை வார்சடை யாய்கண நாதா
கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே
பூத நாதனே புண்ணிய புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே
தீர்த்த னேதிரு வாவடு துறையு
ளங்க ணாவெனை யஞ்சலென் றருளா
யாரெ னக்குற வமரர்க ளேறே.

## திருவாசகம்

வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய்
யானு மதுவே வேண்டி னல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவு முன்றன் விருப்பன்றே.

---

உ

சிவமயம்.

# முத்தி பஞ்சாக்கர மாலை

———o———

## கட்டளைக் கலித்துறை.

1 திருவேயென் செல்வச் சிறப்பே சிவானந்தத் தெள்ளமு
வுருவே யுருவமு மருடன் பெருமொன் றும்புணரா [த
வருவே தெளிந்த வறிவேமெய் யன்பர்க் கருளுந்தெய்வத்
தருவேதென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

2 சுந்தர மாலயன் வாழ்வுமைந் தாரிற் சுவர்க்கவைப்பு
மிந்திர ஞாலங் களுமெனக் கண்டு னிணையடிக்கே
யந்தமில் காதலுற் றுராத வின்பத் தமர்ந்திருக்கத்
தந்தருள் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

3 பண்டறி யாமை பிடித்துவிட் டேனை விடாதுபற்றிக்
கொண்டு குணவழி விட்டுத திருத்தியென் கோதகற்றிப்
புண்டரி கப்பதந் தந்தாய்க்கென் னாலொரு போகமுண்டோ
தண்டமிழ்க் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

4 மாயா படலங் கிழித்தருள் ஞானம் விளங்கவைத்துன்
னேயானந் தத்தி லமிழ்த்திடு வாய்சித்த முத்தசுத்தத்
தூயா சராசர பேதங்கள் யாவையுந் தோற்றுவிக்குந்
தாயான கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

5 அரணங்கண் மூன்று மெரித்தாய் சரண மதினுமன்பர்
மரணம் படாதருள் வைத்தாய் சரணம் வலியவந்தக்
கரணங்க ளான்மெலிந் தெய்த்தேன் சரணநின் பொற்கழலே
சரணந்தென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் றிருவடி வாழ்க.
ஸ்ரீ சிவஞான யோகிகள் திருவடி வாழ்க.

———:———

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நமச்சிவாய மூர்த்தி தாராட்டு.

1 நற்றுறைசைத் தேசிகனை ஞானத்தா ராட்டக்
கற்றவர்க்கு ஞானமருள் கற்பகத்தைக் கைதொழுவாம்.

2 அகளமாய் நின்றோ னருளே வடிவாகிச்
சகலர்மல நீக்கவிங்குத் தான்வேண்டி வந்தாரோ.

3 என்று மருள்சுரக்கு மெய்மாசி லாமணிவாழ்
தென்துறைசை மேவிச் சிறந்தே யிருந்தாரோ.

4 பொய்கண் டகன்றுசிவ போதக் கடலழுந்தி
மெய்கண்ட சந்ததியை மேவி விளக்கினரோ.

5 சித்தர் சிவப்பிர காசர் திருவருளான்
முத்தி நெறியளித்த மூலப் பரம்பொருளோ.

6 உன்னும் பொழுதடியா ருள்ள மலமகல
நன்னமச்சி வாயவென நாமந் தரித்தாரோ.

7 பதியும் பசுவும்பொய்ப் பாசமுநீ காணென்று
விதியா லெனக்களிக்க வேண்டியிங்கு வந்தாரோ.

8 அறிவா யசஞ்சலமா யானந்த மாயெங்கும்
செறிவாகி நிற்போநா மென்றுதெளி வித்தாரோ.

9 உற்றபொரு ளெல்லா முணருமரு ளுற்றிடினுஞ்
சிற்றறிவ னென்றே திருவாய மலர்ந்தாரோ.

10 செம்மைவிழி பானுவினைச் சேரா தறியாப்போ
னம்மைவிட்டு நீயறியா யென்றுரைத்த நாயகரோ.

11 ஒன்று முணரா வகையுயிரி லொன்றுமிக
வென்று மயக்குவது மூலமல மென்றாரோ.

12 சுத்த மசுத்தமெனு மாயைத் தொடர்வகல
நித்த வறிவளித்த நித்தபரி பூரணமோ.

13 நல்வினையுந் தீவினையு நாடோறு மேயகன்று
நில்லா வெனக்கருணை நேய மளித்தாரோ.

14 அமையும் பருவமறிந் தாணவத்தின் றோளடக்கிச்
சமயமிது வென்றுசிவ சத்தி பதித்தாரோ.

15 நேரா யிருவினையு நேராக நேர்ந்தவழி
யாரா வமுதா யளவிறந்து நின்றாரோ

16 வாரா யெனவழைத்து வண்கை முடி மீதுவைத்துத்
தீரா வினைதீர்த்த தேசிக சிகாமணியே.

17 கேட்டன் முதன்முறையாக் கிட்டியபின் ஞானந்த
வீட்டி லெனையிருத்த வேண்டியிங்கு வந்தாரோ.

18 நீங்காத கேவலமு நீண்ட சகலமுமே
நீங்கா மெனவகற்றுந் தேசிக சிகாமணியே.

19 பாச வறிவும் பசுவறிவு நீக்கியரு
ணேச வறிவளித்த நித்தபரி பூரணமே.

20 சுத்த வவத்தைதனிற் சுட்டறவே நிற்கின்மிகத்
தித்திக் கமுதாறுந் தேசிக சிகாமணியே.

21 அத்துவா சத்திபண்ணி யாரா வினையகற்றி
யொத்தபிரா ரத்தமுனக் கில்லையெனற வொண்ணபொருளோ

22 முப்பொருளு நித்தியமே யாயிருக்க முப்பாச
மெப்படியும் யான்சேரா வண்ண மிசைத்தாரோ.

23 தீயமல மொன்றகலச் சேர்ந்தவிரு பாசத்தை
மேயவரு ளாக்கியென்னை மேவி யிருந்தாரோ.

24 அத்துவித வானந்த வெள்ளத் திடையழுந்திச்
சித்தமலந் தீர்த்தவருட் டேசிக சிகாமணியே.

25 ஆவிநா மென்றருளி யன்பாற் றனைநாளும்
பாவியா தென்றன் பதைப்பை யகற்றினரோ.

26 தூய வருளே தொகுமுதலென் றேயிருந்த
நாயேன் ஞேயதறி ஞூட்டு மருமபொருளோ.

27 ஞானமு ஞேயமு ஞாதுருவு மற்றுவிடற
றேறு மெனவினிக்குந் தேசிக சிகாமணியே.

28 ஒன்றோ விரண்டோ வெனத்தெரியா முத்திநெறி
தென்றுறைசை வந்துதந்த தேசிக சிகாமணியே.

29 ஒப்பரிய முத்தியினு மோவா கருமமென்கை
திப்பியமா மென்றருள்செய் தேசிக சிகாமணியே.

30 எண்ணரிய முத்தியிலுஞ் சிற்றறிவே யென்றுமிகத்
திண்ணம வாயுரைத்த தேசிக சிகாமணியே.

31 பாடாண வாதிமுதற் பற்பலவர் முத்தியினைக்
கூடா தெனவுரைத்துக் குற்ற மகற்றினரோ.

32 கூடாத முத்திநெறி கூட்டுவித்ததே நீயொன்றுந்
தேடா திருவென்ற தேசிக சிகாமணியே.

33 ஆசாறு பந்தமெல்லா மாகா தெனத்துரத்திப்
பேசா வநுபவத்தைப் பேசி யளித்தாரோ.

34 எந்தைவே லப்பகுரு வெப்பொழுது மிப்படியிந்
சிந்தைசெய்து போற்றச் சிறந்தே யிருந்தாரோ.

35 வடகலையுந் தென்கலையு மற்றும் பலகலையும்
இடமடைந்த நாயேற்குச் செப்பி யளித்தாரோ.

36 பவநோய் மாற்றிபருட் பண்பினரே யாயிருந்து
நவகோடி சித்தரொடு நண்ணி மகிழ்ந்தாரோ.

37 திருவா வடுதுறையிற் சேர்ந்தவர்க்கு மெய்ஞ்ஞானந்
திருவே யெனத்திருவைத் தாங்கி யிருந்தாரோ.

38 வேலப்ப சற்குருவை மெய்யடியை யெனசிரத்திற்
சாலப் பதித்தெனைச் சந்ததிக்காட் கொண்டாரோ.

39 தானேவந் தானந்த வாழ்வுதந்த தற்பரற்கு
யானேர்கைம் மாறளிக்கு மெண்ண முடையேனே

40 எல்லையிலா வின்ப மெமக்குத் தாரகக்குருத்த
தில்லைப் பொதுவிற் றிருநடனஞ் செய்தாரோ.

41 வாழ்க குருநமச்சி வாயன மலரடிகள்
வாழ்கவே லப்பகுரு வாழ்க வடியாரே.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் றிருவடி வாழ்க.
ஸ்ரீ சிவஞான யோகிகள் திருவடி வாழ்க.

9 மின்னார் மயலுட் படுமெனமலங்—
தன்னாதருள் சோதி யுமாபதி
யென்னும்பர வெங்குரு நாதர்க்குச் (சோப)

10 வெருளும்பவ வேலையி லாழ்ந்திடு—
தெருளிலேனைத் தேடியளித்தருள்
மருளி லருணமச்சி வாயருக்குச் (சோப)

11 மாசுற்ற வல்வினைப் பகை மாய்ந்திட—
நேசிப்பவர் நீதியிற போற்றிடுந்
தேசுற்ற சித்தர் சிவப்பிரகாசர்க்குச் (சோப)

12 கருவாதை தவிர்த்த காருண்ணிய—
மருவாதனை மும்மல மாயத்தவத்
திருவாவடுதுறைசேர் நமச்சி வாயர்க்குச் (சோப)

13 கோடி சூரியர் பேரொளியா மன்று—
ளாடி னாருளாலடு தண்டுறை
நாடி வாழ மறைஞான தேசிகர்க்குச் (சோப)

14 கனகிகாரமிரு கரைமருவிய
பொன்னித தென்கரை யாவடுதண்டுறை
அன்னதானஞ் செயம்பலவாணர்க்குச் (சோப)

15 வண்டார்பொழின் மல்கிய துறைசையிற்
றண்டாமரைத தாளளித் தென்னையாட்
கொண்டகுரு ருத்திர கோடிக்குச் (சோப)

16 காவிரி யின்றென் கரைமருவிய—
பூவிரியும பொழிலாவடு தணடுறை
மேவிய வேலப்ப தேசிகர்க்குச் (சோப)

17 நாடப்பெறு நற்றுறைசைப் பதி—
கூடுமிருகு மாரசாமித்திரு
நாடும பெயர்த தேசிகாசர்க்குச (சோப)

18 ஆகிலாத்துறை சைப்பதியிலன—
நேசமாயன்று நீசர்க் களித்திட்ட
மாசிலாமணித் தேசிகாசர்க்குச் (சோப)

19 அங்கமாறு மருமறை நான்குணர்—
சங்கமங்கள் தழைத்திடு கோமுத்தி
எங்கள் சற்குரு விராமலிங் கேசர்க்குச் (சோப)

20 திருமால் பிரமன்முதற் றேவர்கட்—
கரிதா யடியார்க்கருள கோகழி
யிருவேலப்ப தேசிக ராசர்க்குச் (சோப)

21 நீர்பாய்சடி லம்மதி யொருவிய—
சார்வாந் துறைசைப் பதிசேர்குரு
சீரார் திருச்சிற்றம் பலவர்க்குச் (சோப)

22 திருவாவடு தண்டுறை மேவிய—
வருளேயுரு வாகிய சுந்தர
குருதேசிக ரம்பலவாணர்க்குச் (சோப)

23 பூமேலுறை வோன்புவி மாமகள்—
கோமான்பணி கோமுத்தி மாநகர்
சீமான்சுப்பிர மணியதே சிகருக்குச் (சோப)

24 முத்தரு நவகோடி யழகிய—
சித்தருந் திகழ்தென னாவடுதுறை
யத்தனம்பல வாணதேசிக ருக்குச் (சோப)

25 வந்தாண் டென்வினை மாற்றி மலர்ப்பதந்
தந்தாவடு தண்டுறை மேவிய
வெந்தாய் சுப்பிரமணிய தேசிகருக்குச் (சோப)

26 அருளேவடி வாமர சோதகப—
திருவாவடுதுறைசையுள் வாழ்ந்தருள்
குருதேசிக ரமபலவாணர்க்குச் (சோப)

27 தேமாம பொழில் சூழ் துறைசைப்பதி—
நாமாண் கலைவாயமை நலந்திகழ
கோமான் சுப்பிரமணிய தேசிகருககுச் (சோப)

28 செங்கெ லங்கழனிப் பழனத்தடத—
தன்னம் வெண்குரு கார்துறைசைப்பதி
மன்னவன் சுப்பிரமணிய தேசிகருக்குச் (சோப)

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன திருவடி வாழ்க.
ஸ்ரீ சிவஞான யோகிகள திருவடி வாழ்க.

சிவஞானக் களஞ்சிய வெளியீடு.

உ

சிவமயம்.

# முத்தி பஞ்சாக்கரமாலை (பதவுரை)

# ஸ்ரீபஞ்சாக்கர தேசிகர் மாலை (பதவுரை



விரோதி — சித்திரை

1949

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
யயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ.''

—ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்.

சிவமயம்.

# முத்தி பஞ்சாக்கர மாலை.

## கட்டளைக் கலித்துறை.

திருவேயென் செல்வச் சிறப்பே சிவானந்தத் தெள்ளமுத
வுருவே யுருவமு மூருடன் பேருமொன் றும்புணரா
வருவே தெளிந்த வறிவேமெய் யன்பர்க் கருளுந்தெய்வத்
தருவேதென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

இதன் பொருள்:—என் திருவே - எனது ஐசுவரியமாயிருப்பவரே, என் செல்வச் சிறப்பே - எனது ஐசுவரியத்தின் பயனாகிய சிறப்பாயிருப்பவரே, சிவானந்தத் தெள்ளமுத உருவே-சிவானந்தமாகிய தெளிந்த அமிர்தவடிவாயிருப்பவரே உருவமும்-தமக்கென ஓர் வடிவமும், ஊருடன் பேரும்-தமக்கென ஊரும் பெயரும், ஒன்றும் புணரா அருவே - சிறிதும் இல்லாத நுண்ணியரே, தெளிந்த அறிவே-ஐயமும் மருட்கையும் நீங்கிய சுத்தஞான மூர்த்தியே, மெய் அன்பர்க்கு அருளும் - உண்மையான திருத்தொண்டர்களுக்கு வேண்டுவனவற்றை அநுக்கிரகஞ் செய்யும், தெய்வத தருவே-தெய்வத தன்மை பொருந்திய கற்பக விருக்ஷமாயிருப்பவரே, தென்-அழகிய, கோமுத்தி-திருவாவடுதுறையில எழுந்தருளியிருக்கும், முத்தி பஞ்சாக்கர சற்குருவே-உயிர்களுக்கு முத்தியைக் கொடுத்தருளும் நமச்சிவாய பரமாசாரியமூர்த்தியே எனபதாம்.

அருவப் பொருள்போற் புலப்படாத இயல்புபற்றி அருவே என்றார். (1)

2

சுந்தர மாலயன் வாழ்வுடைந் தாரிற் சுவர்க்கவைப்பு
மிந்திர ஞாலங் கனவெனக் கண்டு னிணையடிக்கே
யந்தமில் காதலுற் றூராத வின்பத மர்ந்தி ருக்கத்
தந்தருள் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

இதன் பொருள்—சுந்தர மால் அயன் வாழ்வும்-அழகிய விஷ்ணுவின் பதவியும் பிரமதேவரின் பதவியும், தாரிற சுவர்க்க வைப்பும்-ஐந்து கற்பக விருக்ஷங்களையுடைய தேவலோக பதவியும், இந்திர ஞாலம் கனவு எனக் கண்டு - இந்திர சாலமும் கனவும் போல நிலையில்லாதன என்று தெளிந்து, உன் இணை அடிக்கே-தேவரீரது இரண்டு திருவடிகளின் மேலே, அந்தம் இல் காதல் உற்று-முடிவு இல்லாத ஆசை பொருந்தி, ஊராத இன்பத்து அமர்ந்திருக்க-நிரதிசய ஆனந்தத்தை அநுபவித்திருக்க, தந்தருள-கிருபை செய்தருள்வாயாக, சோமுத்தி-திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும், முத்தி பஞ்சாக்கர சற்குருவே—உயிர்களுக்கு முத்தியைக் கொடுத்தருளும் நமசிவாய பரமாசாரியமூர்த்தியே என்பதாம்.

தாரு என்பது குறிப்புவமையாம்போலும் முடிந்தது. 'இந்திர சாலம் தோன்றும்பொழுதே இல்லையாய் வேறுவனவற்றிற்கும், கனக்காட்சி கண்டபோதன்றி இடையே அழிவனவற்றிற்கும் உவமையாயின' என்பது சிவஞான சித்தியார் பு. 3. சிவஞான சுவாமிகள் உரை.

பண்டறி யாமை பிடித்துவிட் டேனை விடாதுபற்றிக்
கொண்டு குணவழி விட்டுத் திருத்தியென் கோதகற்றிப்
ண்டரி கப்பதந் தந்தாய்க்கென் றுலொரு போகமுண்டோ
தண்டமிழ்க் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

இதன் பொருள் :—பண்டு - அநாதியே, அறியாமை பிடித்து-ஆணவமலத்தில் அகப்பட்டு, விட்டேனை-தேவரீரை

விளங்குகின்றவரே, சராசர பேதங்கள் யாவையும் தோற்று விக்கும் - இயங்கியற்பொருள் நிலையியற் பொருள் வகைகள் எல்லாவற்றையும் படைத்தருளும், தாயான - மாதாவாகிய, கோமுத்தி-திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும், முத்தி பஞ்சாக்கர சற்குருவே-உயிர்களுக்கு முத்தியைக் கொடுத்தரு ளும் நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம். (4)

அரணங்கண் மூன்று மெரித்தாய் சரண மதினுமன்பர்
மரணம் படாதருள் வைத்தாய் சரணம் வலியவந்தக்
கரணங்க ளான்மெலிந் தெய்த்தேன் சரணநின் பொற்கழலே
சரணந்தென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே.

இதன் பொருள்:—அரணங்கள் மூன்றும் எரித்தாய் - அசுரரது மும்மதில்களையும் எரித்து அழித்தவரே, சரணம் - அடியேன் தேவரீரது அடைக்கலம், அதினும் - அவ்வாறு அழிப்பதினும், அன்பர் - அங்கிருந்த சுதனமன், சுசீலன், சுபுத்தி என்னும் மூன்று சிவனடியார்களும், மரணம் படாது- இறந்தொழியாது, அருள் வைத்தாய்-அருள் புரிந்தவரே, சர ணம்-அடியேன் தேவரீரது அடைக்கலம், வலிய - வன்மை பொருந்திய, அந்தக் கரணங்களால் மெலிந்து எய்த்தேன் - சித்தம் மனம் அகங்காரம் புத்தி என்னும் இவற்றால் மிகவும் இளைத்துவிட்டேன், சரணம்-அடியேன் தேவரீரது அடைக் கலம், நின் பொற்கழலே சரணம்-அடியேனுக்குத் தேவரீரது பொன்போன்ற திருவடிகளே அடைக்கலம், தென்-அழகிய, கோமுத்தி-திருவாவடுதுறையிலெழுந்தருளியிருக்கும், முத்தி பஞ்சாக்கர சற்குருவே - உயிர்களுக்கு முத்தியைக் கொடுத் தருளும் நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

'அதினும் அன்பர், மரணம் படாதருள் வைத்த' வரலாறு காஞ்சிப்புராணத்து முப்புராரி கோட்டப் படலத்தால் நன்கு அறியப்படும்.

மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க!
சிவஞான யோகிகள் திருவடி வாழ்க!

உ

சிவமயம்.

ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த

# ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் மாலை.

---

## கட்டளைக் கலித்துறை.

*அறிவே யருட்செல்வமே நிறைவே யரசே யடியா*
*ருறவே யென்னுயிரே மணியே யுருகா நெஞ்சிற்*
*பிறிவே துரியங் கடந்த சிவானந்தப் பேரமுதச்*
*செறிவே கருணைப் பிழம்பே பஞ்சாக்கர தேசிகனே.*

இதன் பொருள்:—*அறிவே*-ஞானசொரூபமாயிருப்பவரே, *அருட்செல்வமே*-திருவருளாகிய ஐசுவரிய வடிவாயிருப்பவரே, *நிறைவே*-சர்வ பரிபூரணமாயிருப்பவரே, *அரசே*-தலைவரே, *அடியார் உறவே*-திருத்தொண்டர்களுக்குச் சுற்றமாய் இருப்பவரே, *என் ஆருயிரே* என்னுடைய அருமையான உயிராயிருப்பவரே, *மணியே*-இரத்தினம் போன்ற பிரகாச ரூபரே, *உருகாத நெஞ்சிற் பிறிவே*-கசியாத மனத்தினின்றும் நீங்கியிருப்பவரே, *துரியங் கடந்த சிவானந்தப் பேரமுதச் செறிவே*-துரியாதீத நிலையில் அநுபவிக்கப்படும் சிவானந்தமாகிய பெருமைபொருந்திய அமுதத்தின் நிறைவே, *கருணைப் பிழம்பே*-இரக்கமே வடிவுகொண்டவரே, *பஞ்சாக்கர தேசிகனே*-(திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட தேசிகன் சந்தானத்தில் விளங்கிய) துறைசை நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

துரியங் கடந்த நிலையாவது நிருமல துரியாதீதம். அந்நிலை 'கருவிகளோடும் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கி

தரிசனம் என்பது மோனையின்பம் நோக்கித் தெரிசனம் என வந்தது

மருவே னுனதடி யார்திருக் கூட்ட மருவிவஞ்ச
மொருவேன் மகளிர் விழிக்கடை நோக்குக் குளம்பதைத்து
வெருவே னடிமையு மெந்நா ளுனதருண் மேவுவனோ
திருவா வடுதுறைத் தேவேபஞ் சாக்கர தேசிகனே.

இதன் பொருள்:—உனது அடியார் - உன்னுடைய திருத்தொண்டர்களது, திருக்கூட்டம் மருவேன் - திருக்கூட்டத்தைச் சேரேன், மருவி - அத்திருக்கூட்டத்தைச் சேர்ந்து, வஞ்சம் ஒருவேன் - என் மனத்திலுள்ள வஞ்சனையை நீக்கேன், மகளிர் விழிக்கடை நோக்குக்கு-பெண்களது கடைக்கண்ணாற் பார்க்கும் பார்வைக்கு, உளம் பதைத்து - மனம் நடுங்கி, வெருவேன் - அஞ்சேன், அடிமையும்-தேவரீருக்கு அடிமையான யானும், எந்நாள் - எந்தக் காலத்தில், உனது அருள் மேவுவனோ - தேவரீரது திருவருளை அடைவேனோ, திருவாவடுதுறைத் தேவே - திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் கடவுளே, பஞ்சாக்கர தேசிகனே நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம். (4)

ஆனந்த வாழ்வி லடியாரெல் லாரு மகங்களிப்ப
நானிந்த மாயத் தொடக்கினில் வீழ்ந்து நலிதனன்றோ
வானந்த நீண்ட மதிலா வடுதுறை வாழ்முதலே
தேனுந்து பங்கயத் தாளாய்பஞ் சாக்கர தேசிகனே.

இதன் பொருள்:—அடியார் எல்லாரும் - தேவரீரது திருத்தொண்டர்கள் எல்லாம், ஆனந்த வாழ்வில் - பேரானந்தப் பெருவாழ்விலே, அகம் களிப்ப - மனம மகிழ்ந்திருப்ப, நான் - அடியேன் மட்டும், இந்த மாயத் தொடக்கினில்-இந்த

மாயமான பிரபஞ்ச பங்கத்தில், வீழ்ந்து நலிதல் நன்றே - விழுந்து வருந்துதல் நன்றாகுமா, வான் அந்தம் நீண்ட மதில்- மேகமண்டலத்தின் முடிவரை நீண்ட மதில்கள் சூழ்ந்த, ஆவடுதுறைவாழ் முதலே - திருவாவடுதுறையில் வாழ்கின்ற முதல்வரே, தேன் உந்து பங்கயத் தாளாய் - தேனைச் சொரிகின்ற தாமரை மலர்போன்ற திருவடியை யுடையவரே, பஞ்சாக்கர தேசிகனே - நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

வானந்த நீண்ட மதில் என்பது உயர்வுநவிற்சியணி. (5)

வற்றாக் கருணைத் திருநோக்கு நின்முக மண்டலமுஞ்
சற்றே முகிழ்த்த குறுமூர லுந்தட மார்பழகும்
பொற்றாளுஞ்சின்முத் திரையுநெஞ் சூடு பொறித்து
வைப்பாய்
செற்றார் புரஞ்செற்ற தேவேபஞ் சாக்கர தேசிகனே.

இதன் பொருள்:—வற்றாக் கருணைத் திருநோக்கும் - குறையாத இரக்கத்தைப் பொழிகின்ற அழகிய திருக்கண்களும், நின்முக மண்டலமும் - தேவரீரது திருமுக மண்டலமும், சற்றே முகிழ்த்த குறுமூரலும் - சிறிதே அரும்பிய புன்சிரிப்பும், தடமார்பு அழகும் - விசாலமான மார்பினது அழகும், பொற்றாளும் - பொன்போன்ற திருவடிகளும், சின்முத்திரையும் - தேவரீர் காட்டியருளுகின்ற சிவஞானபோத முத்திரையும், என் நெஞ்சு ஊடு - அடியேனது நெஞ்சிலே, பொறித்துவைப்பாய் - எழுதிவைத்தருளும், செற்றார் புரம் செற்ற - பகைவரது முப்புரங்களையும் அழித்த, தேவே - கடவுளே, பஞ்சாக்கர தேசிகனே - துறைசை நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

" மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயி
ரம்மலர்த் தாணிழ லடங்கு முண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தி யாதரோ."

எனச் சின்முத்திரையின் பொருள் திருவானைக்காப் புராணத்துக் கூறப்பட்டது.

இது திருமேனி தியானஞ் செய்யுமுறை கூறிற்று. (6)

தேறாத நெஞ்சந் தெளியாத சிந்தையுந் தேங்கியின்ப
மூறாத கண்ணு மொழியாக் கவலையு முன்புகழே
கூறாத நாவு மெனக்கே தருமென்று கூட்டினையே
சீறா தருள்செய்யுந் தேவேபஞ் சாக்கர தேசிகனே.

இதன் பொருள் : தேறாத நெஞ்சும் - நம்பாத மனமும், தெளியாத சிந்தையும் - நிச்சயிக்காத புத்தியும், இன்பம் தேங்கி ஊறாத கண்ணும் - இன்பம் நிறைந்து ஊற்றெடுக்காத கண்களும், ஒழியாக் கவலையும் - நீங்காத கவலையும், உன் புகழே கூறாத நாவும் - தேவரீரது கீர்த்தியைமட்டும் சொல்லாத நாக்கும், எனக்கே தரும் என்று கூட்டினையே - மிக்க தீவினை செய்த எனக்கே தக்கனவென்று சேர்த்தருளினீரோ, சீறாது அருள்செய்யும் தேவே - சினங்கொள்ளாது அநுக்கிரகம் செய்கின்ற கடவுளே, பஞ்சாக்கர தேசிகனே - துறைசை நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

தெளிதற் கருவி புத்தி யாகலின், சிந்தை என்பது புத்தியெனப் பொருள் கொள்ளப்பட்டது. புகழே என்பதில எகாரம் பிரிநிலை. 'சீறியருளல்' என்றார் ஸ்ரீ அருணந்தி சிவமும். (7)

நின்னரு ணோக்கினுக் கெவ்வள வேனு நெகிழ்ந்துருகா
தென்னுடை வன்மன மின்னார் விழிக்கடைக் கெண்ணி
லந்தோ
வன்னியி னேர்மெழு காயுரு காநிற்கு மாயமென்னே
செந்நெறி யாய்நின்ற தேவேபஞ் சாக்கர தேசிகனே.

இதன் பொருள்:—என்னுடைய வன்மனம் - என்னுடைய கொடிய மனமானது, நின் அருள் நோக்கினுக்கு - தேவரீரது திருப்பாகடாக்ஷத்திற்கு, எவ்வளவேனும் நெகிழ்ந்து உருகாது - சிறிதேனும் இளகியுருகுதல் செய்யாது, மின்னார் விழிக்கடைக்கு எண்ணில் - பெண்களது கடைக்கண்ணின் பார்வைக்கென்றால், அந்தோ - ஐயோ, வன்னியின் நேர் மெழுகாய் - தீயினை எதிர்ந்த மெழுகுபோல, உருகாநிற்கும் மாயம் என்னே - உருகி நிற்கின்ற மாயச்செயல் யாது, செந்நெறியாய் நின்ற தேவே - உயிர்கள் இன்பம் அடைதற்குச் செம்மையான வழியாய் நின்ற கடவுளே, பஞ்சாக்கர தேசிகனே - துறைமங்கை நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

ஆக்கச்சொல் உவமை குறித்து நின்றது 'அளவாரிவி மாடாவேனோ' என்றாற்போல. (8)

பிறவித் துயரினி யாற்றே னடைக்கல மேயுலகின்
மறுகித் திரிந்தலைந் தெய்த்தே னடைக்கல மங்கை
[நல்லா
ருறவைத் தவிர்த்துய்யக் கொள்வா யடைக்கல முண்மை
[யன்பர்
செறிவுக்குள் வாழுமெய்த் தேவேபஞ் சாக்கர தேசிகனே.

இதன் பொருள்:—பிறவித்துயர் - பிறத்தலால் வருந் துன்பத்தை, இனி ஆற்றேன் - இனிமேலும் பொறுக்ககில்

லேன், அடைக்கலம் - அடியேன் தேவரீரது தஞ்சம், பேய் உலகில் - அறிவின்மை பொருந்திய இந்த உலகத்தில், மறுகித் திரிந்து அலைந்து எய்த்தேன் - சுழன்று திரிந்து அலைந்து இளைத்தேன், அடைக்கலம் - அடியேன் தேவரீரது தஞ்சம், மங்கை நல்லார் உறவைத் தவிர்த்து - மங்கைப் பருவத்துப் பெண்களது கூட்டரவை நீக்கி, உய்யக் கொள்வாய் - அடியேன் பிழைக்கும்படி ஆளாகக் கொண்டருள்வீராக, அடைக்கலம் - அடியேன் தேவரீரது தஞ்சம, உண்மை அன்பர் செறிவுக்குள் வாழும் மெய்த்தேவே - மெய்ம்மையான அடியார்களது கூட்டத்தினுள்ளே வாழுகின்ற சத்தியரூபமான கடவுளே, பஞ்சாக்கர தேசிகனே - துறைசை நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

கினைந்தலும் செய்தலோ டொக்குமாதலின் 'மங்கை நல்லா ருறவு' எனப்பட்டது. (9)

இருவினை தாமிவை மும்மல மீங்கிவை யீதுசிவங்
கருவுறு மாருயி ருண்மை யிதுவென்று காட்டவல்ல
குருபர னீயன்றி வேறறி யேனிக் குவலயத்திற்
றிருவெண்ணை மெய்கண்ட தேவேபஞ் சாக்கர
[ தேசிகனே.

இதன் பொருள் :—இருவினை இவை - இருவினை என்பன இவை என்றும், மும்மலம் இவை-ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும் இவை என்றும், ஈது சிவம் - சிவம் இது என்றும் கரு உறும் ஆருயிர் உண்மை இது என்று - பிறவியை அடைகின்ற எண்ணிறந்த ஆன்மாக்களின் உண்மைத்தன்மை இது என்றும்,காட்டவல்ல-தெரிவிக்கவல்ல, குருபரன் நீயன்றி வேறு அறியேன் இக்குவலயத்தில்-பரமாசாரியர் தேவரீரையன்றி இந்தப் பூமியில் வேறொருவர் உளராக யான் அறிந்திலேன், திருவெண்ணை மெய்கண்ட தேவே - திரு

வெண்ணெய் நல்லூரில் அவதரித்தருளிய மெய்கண்ட தேசிகரே, பஞ்சாக்கர தேசிகனே - அறைறைசை நமச்சிவாய பரமாசாரிய மூர்த்தியே என்பதாம்.

தாம், ஈங்கு என்பன அசை. இருவினை என்பது கன்மமலத்தின் வேறாய் எண்ணப்படுதலை 'இருவினைப் பாசமும் மலக்கலார்த்தலின்' எனவும், 'வினையிரண்டுஞ் சாருமல மூன்றும்' எனவும் வரும் பெரியபுராணத் திருவிருத்தங்களால் அறியப்படும். சிவஞான சித்தியாரில் 'கன்மமு மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்' என்பதனுரையில் மூல கன்மம் வேறு எனக் காட்டியருள்வதும் அறியத்தக்கது. தோல்காப்பியர் 'வினையே செய்வது' என்று தொடங்கித் 'தொழின் முதனிலையே' என முடிப்பதும் இக்கருத்துப் பற்றியெனச் சிவஞானபாடியத்திற் கூறப்பட்டது.

அபேதம்பற்றி 'மெய்கண்ட தேவே பஞ்சாக்கர தேசிகனே' என்றார்.

* திருவெண்ணெய்நல்லூர் என்பது திருவெண்ணை என மருவிற்று.

மெய்கண்ட தேசிகன் றிருவடி வாழ்க.
சிவஞான யோகிகள் திருவடி வாழ்க.

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

## முத்திபஞ்சாக்கரமாலை.

செய்யுள்.

அரணங்கண் மூன்றும்
சுந்தரமாலயன்
திருவேயென்செல்வச்
பண்டறியாமை
மாயாபடலங்

## ஸ்ரீபஞ்சாக்கர தேசிகர்மாலை.

—— x ——

அறிவேயருட்
ஆனந்தவாழ்வி
இருவினை தாமிவை
தேருதநெஞ்சங்
நின்னருளோக்கினுக்
பரிசறியேனருட்
பிறவித்துயரினி
பொய்யுங்கவடுங்
மருவேவ[illegible]

ஸ்ரீவித்யா பிரஸ், கும்பகோணம்.

இந்நூல் ஆஸ்திக மக்கள் ஒவ்வொருவர் கையிலும் அணிகலமாக இருத்தற்குரியது. ஆஸ்திகத்தை உலகமக்களுக்கு அறிவுறுத்த முன்வரும் விரிவுரையாளர்களுக்குச் சிந்தாமணி போன்றது இது.

1 x 8 சைஸ், 170 பக்கங்கள் : இரண்டு ஆப்டோன் படங்கள் உள்ளன. விலை அணா 12. தபாற்செலவு வேறு.

**கிடைக்குமிடம் :—**

ஆ. தருமசிவன் பிள்ளை

மெய்கண்டான் நிலையம்,

திரிபுரசுந்தரியம்மன் கோவில் மேலைத்தெரு,

**பேட்டை** P. O. திருநெல்வேலி ஜில்லா.

## நன்றி யுரை.

———:———

**'சிவஞானக் களஞ்சிய'த்தைத்** திங்கள்தோறும் தொகுத்துதவ வேண்டுமெனவும், அத்தொகுப்புக்குத் தம்மாலான உதவிகள் செய்வோமெனவும் எழுதி ஊக்கிய பெரியோர்களுக்கும், அன்பர்களுக்கும் எமது வணக்கம் உரியதாகுக. மற்றும், அவர்கள் செய்த பேருதவிகளும், பெயரும் அடுத்த வெளியீட்டில் விவரமாகக் குறிக்கப்பெறும். பகுதி, சித்தாந்த சரபர், **காசிவாசி சிவஸ்ரீ: ஈசான சிவாசாரிய சுவாமிகள்** பெருங்கருணை மிகப் போற்றத்தக்கது.

## தெரிவித்தல்.

———:———

சமயகுரவர் நால்வர், பரமசிவம், சுப்பிரமணியர் முதலியன பூஜை புரிவதற்கேற்ற வகையில் உயர்ந்த ஓவியப் புலவரைக் கொண்டு ஆயத்தம்செய்து எடுத்த புகைப்படங்கள் கும்பகோணம் பெரிய தெரு, கிருஷ்ண ஸ்டுடியோவில் கிடைக்கும். விலை விவரம் எழுதித் தெரிக. அதிகமாக வாங்குபவருக்குக் கமிஷன் தரப்பெறும்.

Sri Vidya Press, Kumbakonam.